# கொலுவும் அதன் சிறப்பும்

அளவிட முடியாத சக்தியை நம்முன்னோர்கள் இரண்டாகப் பிரித்து, சிவம், சக்தி என வகைப்படுத்தி, சிவனைப் போற்றுதலை சிவராத்திரி எனவும், சக்திக்குரிய வழிபாட்டை ஒன்பது இரவுகளாக, நவராத்திரி விழாவாகவும், சக்தியை முப்பெரும் பகுதிகளாக, தைரியம், ஆரோக்கியம், வீரம் என்பவற்றிற்கு முதல் மூன்று இரவுகளும், அழகு, சந்தோஷம், செழிப்பு இவைகளுக்கு அடுத்த மூன்று இரவுகளை லட்சுமி கடாச்சம் பெரும் வகையிலும், மன ஒருமையுடன் அனைத்து கலைகளுக்கும் பெருமை சேர்க்கும் விதமாக சரஸ்வதி தேவிக்கெனவும் அமைக்கப்பட்டது தான் இவ்விழா.

இயற்கையின் படைப்பில் உள்ள அனைத்திற்கும் பெருமை சேர்பதற்காக, அசையும் பொருள், அசையா பொருள் என்று ஓரறிவு முதல் ஆறறிவு என்றும் அதற்கு மேல் மேல்நிலை எனக் கொண்டு அவைகளை நினைவுகூறும் வகையில், பல படித்தளங்களாக அமைத்து, மனிதன் மேல் நிலையை அடைய குழந்தைகள் முதல் பெரியவர் வரையில் கண்டு மகிழும் வகையில் ஒன்பது இரவுகளுக்கு அவைகளுடைய படையல் நன்றி செலுத்தும் வகையில் அமைப்பதுவே கொலு என்ற பெயரில் அமைந்தது.

கொலு என்பது அசையாமல் காட்சி கொடுப்பது. இது அவரவர் மனப்பாங்கிற்கு ஏற்ப அமைத்து தன் குடும்பத்தினர் மட்டுமின்றி நம்மை சூழ்ந்து வாழும் அனைவரையும் ஜாதி, மத பேதமின்றி அழைத்து மகிழ்ந்து இருப்பதாகும். இதில் நம்முன்னோர், இன்னோர் கைத்திறன்களை பிறர் அறிய வைப்பதற்கும் ஒரு அறிய வாய்ப்பாகும்.

நாம் இறைநிலையை அடைய எத்தனை நிலைகளை கடக்க வேண்டும் என்பதை பார்த்தவுடன் புரிந்து கொள்வதற்காக கொலுவின் படி அமைப்புகளை அமைப்போரும் உண்டு. இந்த ஒன்பது இரவுகளின் வரவேற்பு முறை குழந்தை முதல் பெரியவர் வரை வேறுபாடு இன்றி அமைந்து இருப்பது மற்றும் ஒரு சிறப்பாகவும் இவ்விழா அமைக்கப்பட்டுள்ளது. அவரவர் தகுதிக்கு ஏற்ப பரிசுப் பொருட்கள், வருபவர்களுக்கு வழங்குவதும் மனித குல ஒற்றுமைக்கும், அன்பிற்கும் இணைப்பாகும் இக்கொலு அமைப்பு.

கைத்தொழில் ஒன்றைக் கற்றுக் கொள்
கவலையில்லை என ஒத்துக் கொள்.

கைவினைப் பொருட்களைக் கொண்டு சில பாசிகள் வண்ணமாய் காட்சி அளிக்கப்பட்டன எங்கள் வீட்டில். அவை அம்மா, அப்பத்தா, அம்மணி செய்த பொம்மைகள். பாரம்பரியத்தை பொக்கிஷமாய் பாதுக்காக்கின்றேன்.

தஞ்சாவூர் தலை ஆட்டி பொம்மை கூறும் கருத்து பெரியோர், தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என உணர்த்துவதோ!

விவசாயம் - இந்தியாவின் முதுகெலும்பு கிராமப்புறக் காட்சிகள். பொதுவாக நாம் Super Market போய் மலிவாக இருக்கும் என வாங்காமல் (Local Vendors) தினப்படி வியாபாரிகளிடம் வாங்கினால் நாடு நலம் பெறவும் அவர்களது வாழ்வாதாரமும் உயரும் என விளக்கம் சொல்கின்றன தினப்படி வியாபாரிகள் மற்றும் உழவர்களின் பொம்மைகள்.

உழவர்கள் சேற்றில் கால் வைத்தால் தான் நாம் சோற்றில் கை வைக்க முடியும்!

ஓடி விளையாடு பாப்பா!.... ஓயாமல் online இருக்குதே பாப்பா! பூங்காக்களில் அழகாக ஓடி ஆடும் குழந்தைகள்,

ஓரறிவு முதல் ஆறறிவு வரை உயிரினங்கள், மனிதர்கள் வாழ்வில் படிப்படியாக உயர்ந்து, ஞானிகளாய் திகழ விவேகானந்தர், ஆதி சங்கரர் ஆன்மீகத்தில் திளைக்க – கடவுளுடன் நவ பக்தியின் உதாரணமாய் - மீராபாய் போன்று சதா நாமஸ்மரணத்தில் கடவுளுடன் இணையும் வாழ்வியல் காட்சி அளிக்கும் எங்கள் வீட்டு கொலு நல்லதொரு குடும்பம் பல்கலைக் கழகம் என குடும்பத்திற்கு உதாரணமாய் சிவசக்தி குடும்பம், தங்கள் பிள்ளைகளுடன் முருகன், பிள்ளையார் குடும்ப நிகழ்ச்சிகள். பெண்கள் கொண்டாடும் வளையல்காப்பு நிகழ்ச்சி, விருந்தோம்பல் - பண்பைக் காட்டும் சாப்பாடு பரிமாறும் காட்சி ஓர் தமிழர் பண்பாட்டின் அடையாளத்தை உணர்த்துகின்றன.

அலைமகள், மலைமகள், கலைமகள் ஆகியோர் அருளும் காட்சிகளுடன் அஷ்டலஷ்மிகளின் அவதாரங்கள் கண்கொள்ளா காட்சிகளாய் அமைந்திருக்கின்றன.

அநீதிகளை அழித்து நீதிகளை நிலை நாட்ட யுகங்களின் முடிவில் மகாவிஷ்ணுவின் அவதாரங்கள் மொத்தம் பத்து.

இது போன்ற ஒற்றுமையை, கொலு அமைப்பு எளிதாக புரிய வைப்பது வேறு எந்த அமைப்புகளிலும் இல்லாத சிறப்பு மிக்க விழாவாகும் ‘‘நவராத்திரி கொலு அமைப்பு’’.



